**48 T I,II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)

දෙමළ සාහිත්‍ය රසාස්වාදය I, II
தமிழ் இலக்கிய நயம் I, II
Appreciation of Tamil Literary Texts I, II

## தமிழ் இலக்கிய நயம் - வினாத்தாள் II

※ **1 ஆம்** வினாவுக்கும், ஏனைய **2,3,4,5** ஆகிய வினாக்களுள் எவையேனும் **இரண்டு** வினாக்களுக்குமாக, மொத்தம் **மூன்று** வினாக்களுக்கு விடையளிக்குக.

※ இவ்வினாத்தாளுக்கு விடையளிப்பதற்கு விடை எழுதும் புத்தகத்தைப் பயன்படுத்துக.

**1.** பின்வரும் கவிதைப் பகுதியை வாசித்து, அதன் கீழ்த் தரப்பட்டுள்ள வழிகாட்டற் குறிப்புகளின் அடிப்படையில் கவிதையை நயந்து குறைந்தபட்சம் **200** சொற்களில் எழுதுக.

திங்கள் மாலை வெண்குடையான்
சென்னி செங்கோ லதுஓச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி;
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாது ஒழிதல் கயற்கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற்பென்று
அறிந்தேன் வாழி காவேரி.

மன்னு மாலை வெண்குடையான்
வளையாச் செங்கோ லதுஓச்சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி;
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல் கயற்கண்ணாய்
மன்னு மாதர் பெருங்கற்பென்று
அறிந்தேன் வாழி காவேரி.

உழவர் ஓதை மதகோதை
உடைநீ ரோதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப
நடந்தாய் வாழி காவேரி;
விழவ ரோதை சிறந்தார்ப்ப
நடந்த எல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன் தன்
வளனே வாழி காவேரி.

மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை அது போர்த்துக்
கருங்க யல்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி
கருங்க யற்கண் விழித்து ஒல்கி நடந்த வெல்லாம் நின் கணவன்
திருந்து செங்கோல் வளையாமை அறிந்தேன் வாழி காவேரி.

[பக். 7 ஐப் பார்க்க

இங்கே வெட்டி அகற்றவும்

வாழி யவன்தன் வளநாடு மகவாய் வளர்க்கும் தாயாகி
ஊழி உய்க்கும் பேருதவி ஒழியாய் வாழி காவேரி
ஊழி உய்க்கும் பேருதவி ஒழியா தொழுகல் உயிரோம்பும்
ஆழி யாள்வான் பகல்வெய்யோன் அருளே வாழி காவேரி.

(அ) சிலப்பதிகார காவியத்தில், 'கானல்வரி' இடம்பெறும் சூழ்நிலையும் அதன் முக்கியத்துவமும்

(ஆ) சோழ மன்னனின் சிறப்பு

(இ) காவிரி நாடனாகிய சோழன், கங்கை நாட்டையும் கன்னியாகுமரியையும் கைப்பற்றியமையைச் சொல்லும் பாங்கில் காணத்தகும் நயம்

(ஈ) காவேரி ஆறு பற்றிய விவரிப்பில் காணத்தகும் நயங்கள்

(உ) சோழ நாட்டோடு காவேரிக்குள்ள உயிரோட்டமான தொடர்பு விவரிக்கப்படும் வகை

($5 \times 6 = 30$ புள்ளிகள்)

**2.** **'கிஷ்கிந்தைப் படலத்தில்'**,

(i) கடமை மறந்த சுக்கிரீவன் மீது இராமன் கொண்ட கோபம்

(ii) தாரையின் வார்த்தைகளால் இலக்குவனிடத்து ஏற்பட்ட மனமாற்றம்

ஆகியன விவரிக்கப்படுமாற்றை விளக்குக.

(15 புள்ளிகள்)

**3.** தலைவன் மேலான தலைவியின் அன்பும் அக்கறையும்,

(i) 'முளிதயிர் பிசைந்த...' எனத் தொடங்கும் செய்யுளிலும்

(ii) 'தங்க வளைக்கைகள் தொட்டுச் சமைத்தது...' எனத் தொடங்கும் கவிதையிலும்

வெளிப்படுமாற்றை விளக்குக.

(15 புள்ளிகள்)

**4.** **'வஞ்சியர் காண்டம்'** நாடகப் பகுதியில்,

(i) கண்ணகி

(ii) மாதவி

ஆகியோரின் உயர்வு வெளிப்படுமாற்றைத் தெளிவுபடுத்துக.

(15 புள்ளிகள்)

**5.** **'மின்மினிகளால் ஒரு தோரணம்'** எனும் கட்டுரையில் இடம்பெறும்,

(i) ஹைக்கூ கவிதை பற்றிய விளக்கம்

(ii) அந்த விளக்கத்துக்குக் கையாண்ட உருவகங்களின் பொருத்தப்பாடு

என்பவற்றை எடுத்துரைக்குக.

(15 புள்ளிகள்)

❊ ❊ ❊